உ

குருவே நமஹ:.

தெய்வப்புலமை

அவ்வை

திருவாய்மலர்ந்தருளிய

# பெட்டகம்.

இஃது

சுகானந்தபிள்ளை

கேட்டுக் கொள்ளுதலால்

நாகபட்டணம்

ம-ா-ா-ஸ்ரீ

ம. ந. வேங்கடாசலம்பிள்ளை

என்னும்

சராராஜபுனிதராற்

றுலக்கியது.

சென்னபட்டணம்:

கலாரத்நாகர அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

௧௮௮௭ளு. 1887

உ

கடவுள்துணை.

# அ றி வி ப் பு.

---

இந்நூல் சில சிதைவுற்றும் திரிபுற்று மிருந்ததனை சரராஜரார் கோர்வை செய்யப் பட்டன.

இந்நூலின் ஒவ்வொரு செய்யுளிலும் அடங்கிய விரிந்த விசித்திரமான கதைகளை விவரித்தறிய வேணுமென்ற விருப்புடையோர் அவாவைத் தெரிவித்தால் ஒவ்வொரு செய்யுள்களி னடியிலும் உரையாக அதனை விரித்து அக்கதைகளோடு இந்நூலை அச்சிடக் கூடும்.

இல்லற தருமத்தை நடத்தும் விவேகிகள் கூறும்வித மடவார் மயலி லாழ்ந்து மதிகெட்டுழலா வண்ணமும், அவர்கள் பரமபோதத்தில் அறிவைச்செலுத்தி உய்யும் வண்ணமுமே யாம்.

---

குருவேநமஹ:

# முகவுரை.

சரராஜகமனத்திற் சுகானந்தபிள்ளை யென்பவர் தனக்குற்ற சில சந்தேகங்களை நிவர்த்தி செய்துகொண்டு வருங்காலத்திற் றொன்றுதொட்டு வழங்கிவரும் பழமொழிகளையும் நிவர்த்திசெய்கையில் சோபனம் கொட்டுவதென்று ஒன்றிருக்கப் பெட்டகம் கொட்டுவதென்பது ஒன்று வழங்கிவருவது யெதற்காக யார் காலத்தில் யாரால் ஏற்பட்டதென அவை உண்டாகியதைக் கூறிய விவரம்.

கலியுகசகாப்தம் ௩கூச௦-நிகழாநின்ற காலத்தில் தமிழ் நாட்டிற் காவிரிநதியாற் சிறப்புற்றோங்கிய சோழதேசத்தில் திரிசிரபுரத்தை அடுத்த உறையூரை இராஜதானியாக அரசுபுரிந்த அகளங்கசோழ மஹாராஜன் அரண்மனையில் மனோவர்த்தியில் வேலைபார்த்துக்கொண்டு வீரகோபாலனென்பவன் ஒருவனிருந்தான். அவன்

தன் மனைவியாகிய பூங்கோதையிடத்தில் அதிக விருப்பமுள்ளவனாக விருந்தான். அவள் இவனிடத்தில் அகநட்பின்றி முகநட் புடையவளாய் "வண்ணானுக்கு வண்ணாத்தி யிடத்தும் வண்ணாத்திக்குக் கழுதையிடத்தும்" என்ற பழமொழிப்படி பரநாயக சங்கம முற்றிருப்பது வீரகோபாலன் அறியானாய் அதிக உள்ளன்புற்றிருக்கு நாளில் ஒருநாட் சோரநாயக னானவன் பூங்கோதையை நோக்கி "உனது நாயகனாகிய வீரகோபாலன் வருவான் வருவானென்கிற அச்சத்தோடு நாமிருவரும் சுகித் தலைவினாலும் அவன் இவ்விடத்தைவிட் டகன் றிருப்பானாயின் மனமருட்சி அற்றிருப்போம்" என்றான். அது

கேட்டுப் பூங்கோதை 'அப்படியே தமதிஷ்டப்படி யெவ்விதத்தும் இவ்விடத்தைவிட் டகன் றிருக்கும்படி செய்கிறேன்' என்று அதற்கு உபாய மெப்படியெனப் பலவாறாக யோசித்து வாரத்தி லொருதரம் இரண்டுதரம் தன்னாயகன் வெளியிலிருந்து வரும்பொழுது தலைநோகுதென்று சொல்லிக்கொண்டிருந்து பின்பு அடிக்கடி அப்படிச் சொல்லிக்கொண் டிருந்தாள்.

அதன்பின்பு ஓயாமல் வலியுண்டாயிற் றென்றும், தன்னாற் சகிக்க முடியாததா யிருக்கிறதென்றும், ஜாலம் செய்ததை வீரகோபாலன் மெய்யென் றெண்ணி அவள்படுந் துயரத்தைப்பார்த்துச் சகிக்கக் கூடாதவனாய் அனேகம் வயித்தியஞ் செய்தும், "பொய்த்தூக்கக்காரன் கும்பகருணனுக்குக் குரு" வென்பதுபோல இன்னம் தீரவில்லை யென்பதைக்கண்டு ஒருநாளிரவு வீரகோபாலன் தனித்திருந்து 'என்ன வயித்தியம் செய்தும் தீரவில்லையே யிதற்கென் செய்வேன்' எனப் புலம்பிக்கொண் டிருக்கும்போது அவனைநோக்கிப் பூங்கோதை சொல்வதாவது 'நான்படும் துயரமானது என்னாற் சகிக்கக் கூடாமையால் புலம்பிக்கொண் டிருக்கையில் நேற்றுப்பகல் இங்குவந்த சந்நியாசி ஒருவர் இப்படித் தீராவலிக்கு வெள்ளைமுதலை அடைந்திருக்கும் குழிமண்ணும், வேங்கை அடைந்திருக்கும் புதர்மண்ணுங் கொண்டுவந்து இரண்டையும் ஒன்றாக அரைத்து இரண்டு மூன்றுதடவை போட்டால் பின் எப்பொழுதும் வாராது, இது சிலருக்குச்செய்த அனுபவம்'

என்ருர். 'அவைகள் எங்கு அகப்படும்' என்றேன். 'கங்கையாற்றின் வடகரை யோரத்திற் போய் விசாரித்தால் அகப்படும்' என்ருர். என்ருள்.

க வி.

தீய வெம்பசிக் குணவினைத் தேடியே திரிவார்
தூயன் மெய்ப்பத மறந்துபெண் மயலினிற் சுழன்று
ஈரயை ஒப்பவ ரவர்மொழி வேதமாய் நம்பிப்
பேயை யொத்தலை வார்க்கொரு மதியுண்டோ பேசாய்.

என்றபிரகாரம் வீரகோபாலன் அதைக்கேட்டு அப்படியே கொண்டுவருதற் கியைந்து கட்டமுது கைக்கொண்டு வடதிசை நோக்கி ஒருநாள் முழுவதும் நடந்து அன்றிரவு ஓர் திருவாயிலிற் றங்கினன். தேச சஞ்சாரியாகிய அவ்வையும் அன்றிரவு அத்திருவாயிலிற் றங்கிய பொழுது அங்கிருந்த வீரகோபாலனைக் கண்டு 'நீ யாரப்பா? எங்கிருந்து எங்கு செல்கின்ருய்' என்ருள். அதுகேட்டு அவன் தன திருப்பிடமும் தன் மனையாட்குற்ற வியாதியின்கூறும் அங்குநடந்த காரியம் அனைத்தும் கூறி அதற்காக இவ்விரண்டு மருந்துங் கொண்

டுவரும்படி தான் செல்கின்றதையும் விவரமாகக் கூறக்கேட்டு இதென்ன ஆச்சரியமான காரியமாக இருக்கின்றதென்று அவ்வை பலவாருக யோசித்துக்கொண் டிருக்குமளவில் வீரகோபாலன் அவ்வையை நோக்கி 'நீயார் ? இவ்விருத்தாப்பிய காலத்தில் எங்கிருந்து எங்கு செல்கின்ருய்! போசனம் எங்கு செய்தாய்! மெத்தப்பசியும் களைப்பும்போலத் தோன்றுகிறபடியால் என்னிடத்திலிருக்கும் கட்டமுதினுற் பசிதீர்வாய்' என்ருன். உடனே அவ்வை அவன் கருத்தின்படி பசிதீர்ந்து இவன் இப்பசி நேரத்திற் ருனுய் விசாரித்து உதவிய உதவிக்கு நாமென்ன பிரதிஉபகாரம் செய்யக் கடவோமென்றெண்ணி ஆனுல் யிவன்முற்கூறியவைகளால் யிவன்மனைவி யேதோ சோரகமனிபோ லிருக்கின்றது ஆதலால் இவனைத் தொலைக்கும் பொருட்டு இப்படிப்பட்ட யோசனை செய்திருக்கிருளென்று நிச்சயித்து அவனை நோக்கி அனேகமாகப் பலவார்த்தைகளைப் பேசிக்கொண்டிருந்து 'உன்மனைவி பரகமனியாதலால் உன்னை யிப்படிப்பட்ட காரியத்திற்குக் கோரினுள்'

என்ருள், அதுகேட்டு 'என்மனைவி அப்பேர்க் கொத்த நடக்கையை உடையவளாக இருந்தால் நான் இவ்வளவுதூரம் செல்லவும் இப்படிப் பட்ட மருந்தினைக் கொண்டுவரவும் எத்தனிப்பேனு? அவளை அருந்ததிக்கு மேலானவளென் றெண்ணவேண்டுமே தவிர வேறில்லை' என்ருன். அதுகேட்டு இவன் மயலால் மதியிழந்தானென்று தெரிந்து அதனைத் திருப்பத்தக்க சாதுரியமான அனேகவார்த்தைகளைச் சொல்லி 'நான் உன்மனைவியும் அவள் சோரபத்தாவுமாக உன்கண்முன்னே நீ ஒப்புக் கொள்ளும்படி காண்பித்தாற் சரிதானு'? என்ருள். 'அப்படிக் காட்டினுற் சரிதான்' என்ருன். அவ்விருவரும் அன்றிரவு விடிந்தவுடனே உறையூரை நோக்கித் திரும்பிவருகையில் வழியிலும் அவ்வை அனேக வார்த்தைகளைக் கூற, வீரகோபாலன் அப்பேர்க்கொத்தவ ளல்லவென்றும் அப்படிச் செய்யாளென்றும் தன்மேல் மிகவும் அன்புடையா ளென்றும் பலவிதமாகக் கூறி வரும் வழியில் அவ்வை சொற்படி பிரம்பாற் செய்த பெட்டகப்பெட்டி ஒன்று விலைக்கு வா

ங்கிக்கொண்டு அஸ்தமித்தவுடனே உறையூரி ன் உட்சென்று இருவருமாய் வீரகோபாலன் வீட்டுத்திண்ணையில் வந்திருந்து அவ்வை கூறி யது, 'நீ இந்தப் பெட்டகத்துட் புகுந்துகொ ண்டு பேசாதிரு? நான் வெளிப்படச்சொல்லும் பொழுது வெளிப்பட்டு உன் னிஷ்டப்படி செய்துகொள்வாய்' என்றாள். அப்படியே நல் லதென்று அவனும் பெட்டகத்துள் முடங்கிக் கொண்டான் அவ்வை உடனே சிறிய கயிற் றாற் கட்டிவைத்து விட்டு அடைத் திருக்கும் கதவைத்தட்டி 'இவ்வீட்டி லாரம்மா!' என்றா ள். அனேக சப்தத்திற்குப் பின்பு, பூங்கோதை கதவைத்திறந்து 'யார்' என்றாள், அவ்வை 'நான் பலவித சாஸ்திரங்களைச் சொல்லத் தெரிந்த சாஸ்திரி, அதாவது இரேகைசாஸ்திரம், முகசா ஸ்திரம், பார்வை சாஸ்திரம், சொற்சாஸ்திரம் முதலிய பலவித சாஸ்திரங்களும் கூறுவேன் இங்குவந்த விடத்திற் பொழுதுபோய் விட்ட படியால் உன்வீட்டு இரேளியில் இந்தப்பூசைப் பெட்டகத்தை வைத்துக்கொண்டு நானும் இ ராத்திரிக்கு மாத்திரம் தங்கி யிருப்பதற்குக்

கொஞ்சம் இடங்கொடுப்பாயேல் விடிந்தவுடனே உனக்கு வேண்டிய குறிகளெல்லாம் சொல்வேன்' என்றாள். அதுகேட்டுப் பூங்கோதையானவள் பெண்பாலின் சுபாவம் குறிகேட்கும் விஷயத்தில் அதிக விருப்ப மாதலால் 'எனக் கிப்பொழுது சில குறிசொல்பார்ப்போம்' என்றாள். உடனே அவ்வை 'மற்றக்குறிகளெல்லாம் பகலில் இரேகை முதலியவைகளைப் பார்த்துத்தான் சொல்லவேண்டும். ஆனல் இப்பொழுது நீ பேசியவார்த்தையைக்கண்டு சொற்குறிமாத்திரம் சொல்லுகிறேன் கொஞ்சங் கேள்' என்று சொன்னதாவது, முன் வீரகோபாலனிடத்தில் விசாரித்துத் தெரிந்தமையாதலால் 'உனது பிறப்பிடம் குன்றத்தூர், உனக்கு ஐந்துவயதிற் றகப்பனிறந்துவிட்டார், தாயிருக்கின்றாள், உனக்கு மூத்த சகோதரம் பெண் ஒன் றிருக்கின்றது, இளைய சகோதரம் ஆண் ஒன்று பெண் ஒன் றிருக்கின்றன, உனக்குப் புகுந்த இடத்தில் எவ்வளவு ஸ்திதி யிருக்கின்றதோ அவ்வளவு ஸ்திதி பிறந்தயிடத்திலுமிருக்கின்றது. உனக்குக் கலியாணமாகி மறு

வருஷம் கெற்பமுண்டாகி நாலாவதுமாசம் விச்சிதையாகி விட்டது. அதுமுத லிதுபரியந்தம் குழந்தை கிடையாது, மற்றெல்லாம் விடியற்காலம்பார்த்து விபரமாகச் சொல்லுகிறேன்' என்ருள்; அதுகேட்டுப் பூங்கோதை அதிகசந்தோஷமடைந்து 'நல்லது உள்ளே வா' என்ருள். எனது பூசைப்பெட்டகம் இதனை ஒரு கூலியாள் கொண்டுவந்தான், அவன் இங்குவைத்துவிட்டு ஸ்ரீரங்கத்துக்குப் போயிருக்கின்ருன், விடியற்காலம் வருகிறே னென்ருன். இது அதிகக் கனதியுள்ளதாகையால் என்னுற் றூக்க முடியாது. நீதான்றூக்கி உள்ளேவைக்க வேணுமென்ருள். அப்படியே அசைத்துப் பார்த்துத் தன்னுல் முடியாமல் உள்ளேயிருந்த சோரநாயகனை அழைத்துத் தானும் அவனுமாகத் தூக்கி இரேளியில் வைத்துவிட்டு அவ்வைக்கும் போசனமிட்டுப் படுத்துக் கொள்ளும்படி சொல்லிவிட்டுத் தானும் சோரநாயகனுமாக உல்லாசமாகப் பேசிக்கொண் டிருக்கையில் நிலவு உதயமாகி முத்தத்திற் செவ்வையாய்ப் பிரகாசித்தலைக்கண்டு அவர்களிருவரும் சந்தோஷமாய்ச்

சோபனம் கொட்ட எத்தனித்து அதற்குத் தக்கபாட்டு ஒருக்காற் கிழவிக்குத் தெரியுமெ ன்றெண்ணி பூங்கோதை அவ்வையை நோக்கி அம்மாச்சி! உனக்குச் சோபனம் கொட்டுதற் கிசைந்த பாடல்கள் எதாவது தெரியுமா வெ ன்ருள். உடனே அவ்வை நான் நேர்த்தியாகிய பாட்டுகளெல்லாம் சொல்லுவேனென்ருள். ஆனுற் சற்றுநேரம் இந்த முத்தத்தில் வந்து சொல்லென்ருள் நல்லது எனது பூசைப்பெ ட்டகம் இதனைக் கைவிடேன் ஆதலால் இத னைத் தூக்கிவந்து நடுவில் வையுங்கள் நான் சொல்லுகிறேனென்ருள். அவர்களிருவருமாக உடனே பெட்டகத்தைத் தூக்கிவந்து நடுவில் வைத்துவிட்டவுடனே அவ்வை பெட்டகமே பெட்டகமே யென்று கையைத்தட்டிப் பெட் டகத்தையுந் தள்ளி உள்ளிருப்பவனுக்குப் புத் தியும் சாட்சியுமாகக் கூறியது.

---

சிவமயம்.

# பெட்டகம்.

## நூல்.

துய்யக ணேசனும் வல்லபை பாதம்
தொழுது நடுவினி லுன்னைவைத்தேன்
மெய்யென்று நம்ப வுபாய மிதைவிட்டு
வேறுளதோ சொல்லவை பெட்டகமே. (க)

வேதனும் மாலு மரன்கந்த னிந்திரன்
விண்ணவர் தங்கள் மனைவியொடும்
தீதற வெந்தன் முனுந்தனைக் காட்டித்
திருப்பினவ ரன்றோ பெட்டகமே. (உ)

கண்ணுங் கருத்து முனக்கிருந்தும் வெளிக்
காரிய மெல்லாம் தெரிந்திருந்தும்
பெண்ணின் மதியி லகப்பட் டுழன்றனை
பேய்மதி யேதுசொல் பெட்டகமே. (ங)

வையகந் தன்னில் மனிதனென வந்து
வஞ்சகமா யுனைத் தஞ்சமெனும்
தையலர் சொல்லுக் கடிமை புரிவதிற்
சாதக மேதுசொல் பெட்டகமே. (ச)

மாதுமை சொல்லை யரன்கேட்டு முனம்
மால்மக னோர்தலையைத் துணித்துப்
பேதை மதிகொண் டலைந்த னனேயது
பேசி யறியாயோ பெட்டகமே. (ரு)

மானைப் பிடியென்று ஜானகி சொல்லிய
வார்த்தைக்கி ராமன் தொடர்ந்ததினல்
ஈனமும் துன்பமும் வந்த கதைதனை
யேனறி யா யோசொல் பெட்டகமே. (சா)

மங்கையர் சொல்லினில் மூவரு முன்னமோர்
மாமுனி மங்கை யிடத்தினிலே
தொங்கினர் தொட்டிலி லேயெனும் வார்த்தையைச்
சொல்ல வறியாயோ பெட்டகமே. (எ)

இந்திரன் மாமுனி மங்கை யகலி
யிடத்தினி லாசை யெழுப்பியதாற்
சிந்தை கலங்கி யுடலினி லாயிரம்
சேர்ந்த தறியாயோ பெட்டகமே. (அ)

வல்லபை சொன்ன மொழிகேட்டுத் தம்பி
மாமுகன் முன்ன மிருந்ததனல்
நல்ல மணமற் றிருந்தன னேயது
நாடி யறியாயோ பெட்டகமே. (கூ)

கந்தனும் யானை மகளையும் வேடர்தங்
கன்னிகை யோடுங் கலந்ததினல்

முன்தங் குலத்தவர் பெண் கொடுக்காத
முறையறி யாயோநீ பெட்டகமே. (க0)

காட்டிற் றவமுடை யானொரு கோட்டுக்
கலைமுனி செய்த தவமிழந்து
நாட்டினில் ரோமன் மகளை யடைந்தது
நாடறி யாததோ பெட்டகமே. (கக)

கோசல வேந்தன் றசரதன் முன்மயல்
கொண்டு வரத்தைக் கொடுத்ததனுற்
றேசத்தை விட்டு மகனைத் துரத்தித்தன்
றேகமும் விட்டனன் பெட்டகமே. (கஉ)

தம்பி மனைவி தனக்கு மகளென்ற
சாஸ்திர மறியாத வாலிதனை
அம்பொன்றில் மண்ணினைக் கவ்வ வடித்த
தறிந்திலையோ சொல்வை பெட்டகமே. (கங)

ஆயிரம் வேத மறிந்தொரு மூவுல
காளை செலுத்திய ராவணனும்
பேயனைப் போற்கெஞ்சி யஞ்சி யழிந்ததைப்
பேசிற் பெருங்கதை பெட்டகமே. (கச)

மண்ணுல கத்தில் மனுவைப் படைத்து
வழிப்படு நூல்வைத்த நாள்முதலாய்
எண்ணி லிவர்போற் பெருமை யிழந்தவர்
எத்தனை கோடியோ பெட்டகமே. (கரு)

வேதனும் வாணியும் போலிருப் போமொரு
வேற்றுமை யில்லாத பெண்மயிலைப்
பேதக மாக வுரைத்தனையே யென்ன
பெண்புத்தி யென்றாயே பெட்டகமே. (கசு)

கந்தனும் வள்ளியும் போலிருப் போமருக்
கலப் பிலாத குலக்கொடியை
நிந்தனை யாக வுரைத்தனையே புத்தி
நேரிலையோ வென்ற பெட்டகமே. (கஎ)

மங்கைய ராசை யடைந்தோர் தங்கள்
மதியை யிழப்பரென மறைநூல்
துங்க முனிவ ருரைத்ததைப் பொய்யென்று
சொல்லவு மாகுமோ பெட்டகமே. (கஅ)

தன்மதி யற்றவர் பெண்மதி கேட்டுத்
தயங்குவரோ வென்ற சாஸ்திரத்தை
உன்னிலு மின்ன முனையொப் பவர்தம்
உருவிலும் கண்டுகொள் பெட்டகமே. (கக)

முற்றிலு மின்ன மறிந்தபி னன்றல்
முடிந்தவை செய்வை யதன்முனமே
புத்தி மயங்கி யெழுந்து பதறிப்
புலம்பி விடாதேயென் பெட்டகமே. (உ0)

இத்தனை நாளாகக் கொண்ட மனைவி
யியல்பறி யாத வுனக்கிதமாய்

எத்தனை நாளுனைத் துந்தடுத் தாயதை
யெண்ணி யறிந்துகொள் பெட்டகமே. (உக)

கொண்ட கணவ னருகிருக்க வின்னம்
கொழுந்தன் மாம னெதிரிருக்கப்
பண்டு பழகிய சோரனைச் சார்ந்த
பழங்கதை கேட்டிலை பெட்டகமே. (உஉ)

மங்கைய ருள்ளமும் வானத்தின் நீளமும்
வையகத் தற்ற மணற்றொகையும்
கங்கை பரவுங் கடலின தாழமும்
கண்டவ ருண்டோசொல் பெட்டகமே. (உரு)

ஈச னிருப்பிடங் கண்டாலு முமை
பாச வலைதனை வென்றாலும்
வாச மலர்க்குழல் மாதர் மனத்தை
வகுத்தறி வாருண்டோ பெட்டகமே. (உச)

கொண்டவர்க் கேற்ற மனைவி யமைந்திடிற்
கூடி யிருப்பது வில்லறமே
திண்டு முண்டாக விருக்கிற சந்நியாசத்
திறம்நல் லறமன்றே பெட்டகமே. (உரு)

ஆனை யுறங்கியும் வேங்கை பதுங்கியும்
ஆடுபின் வாங்கியும் வில்வளைந்தும்
ஈனர் முகஈட்புப் பேசியும் பாய்குவ
ரொன்றெண்ணி லாயோநீ பெட்டகமே. (உசு)

மாலை புனைந்தவ ரல்லால் வேறு
மனத்தி லெண்ணாத மலர்க்குழலாள்
ஞாலத்திற் பத்தினி யாகுமவள் சொல்லை
நன்றென்று கொள்ளலாம் பெட்டகமே. (உஎ)

பத்தா வன்றிச் சிறந்த புருடனைப்
பார்க்கில் நினைப்பள் புணர்ந்தறியாள்
சித்தினி யாகு முலகத்தி லெங்கும்
சிறந்திருப்பா ளன்றோ பெட்டகமே. (உஅ)

நாயக னோடு மிருப்பாள் வேறு
நயப்பவ ரோடு மருவிருப்பாள்
தாயவள் நானென்பள் சங்கினி மாதென்று
சொல்ல வறியாயோ பெட்டகமே. (உகூ)

பத்தியு மற்றுப் பலரையும் சார்ந்து
பரத்தைக் குணத்தை யனுசரிப்பாள்
அத்தினி யாமென்று வேளுயர் நூலி
லறிந்திலையோ சொல்லை பெட்டகமே. (௩0)

சாதி யெதனிலும் சங்கினி மாதர்க்குச்
சால மதிகமென வுரைப்பார்
பூதலத்தி லிவர் சொற்றிர மென்னுற்
புகலவு மாகுமோ பெட்டகமே. (௩க)

ஆரோ விந்தக் கிழவி பிதற்ற
லவலமென் றெண்ணிலை யேமுனமே

பாராய் முற்று மறிவதன் முன்னம்
பதறி விடாதேயென் பெட்டகமே. (௩உ)

உந்தனைக் கண்டுநீ யாரொன்று சோறுண்
டுசாவுதல் செய்கின்ற காலத்திலே
எந்தனை யாரோ கிழவி பயித்திய
மென்றெண்ணிக் கொண்டாயே பெட்டகமே. ()

கொண்டவள் மார்க்க மறிந்த வனாயிலும்
கூறென்று சொல்லிய காலத்திலே
அண்டைவீ டின்னவித மிருக்குமென்
றறியா ளென்றுயே பெட்டகமே. (௩௪)

இப்படி யுன்வீட்டி லுன்னைப்போ லொன்று
இருக்குமே யாகிலயல் வீட்டில
எப்படிப்போக மனம்வரு முன்சொல்லே
யேற்றுக் கொண்டேனின்று பெட்டகமே. (௩௫)

காதலிக் குற்ற துயரத்தைக் கண்டு
கடுவழி செல்கிறே னென்றுயே
சூதறியாம லிறக்கும் வழியிற்
றுணிந்து நடந்தனை பெட்டகமே. (௩௬)

என்னை யின்னுமொன் றறியு முன்னேபசிக்
கேற்ற வமுதை யளித்ததனல்
உன்னைப் பொருட்டென வெண்ணி யிதுசெய
வுட்பட்டே னல்லவோ பெட்டகமே. (௩௭)

மன்னவனுன வகளங்க சோழன்
மகிட்சி புரியு முறையூரிற்
பொன்னனா வீதியிற் றென்முக நோக்கும்
புதுமனே யென்றனே பெட்டகமே. (௩அ)

நாளையிரவுன் மனேயாட்டி நன்
னடக்கை யறிந்தபின் வேணுமென்முல்
வேளேயும் நாழியும் பார்த்து வடதிசை
மேவலா மென்றனன் பெட்டகமே. (௩௯)

நல்லதென் றென்பின்னே நீயுந் திரும்பி
நடந்துவருகு மிடை நடுவிற்
கொல்லே யறிவாள் மனேயறிவாள் வேறு
குற்றமிலா ளென்ற பெட்டகமே. (௪௦)

வே று.

பாப்பா னேரிக் கரை தனிலே புறம்
பாராள் பாரா ளென்றீரோ - இதைக்
கேட்டுக்கொள் பெட்டகமே - எண்ணிப்
பார்த்துக்கொள் பெட்டகமே. (௪௧)

முல்லே வனத்தடித் தோப்பில் வருகையில்
மோச மில்லாளென்று சொன்னீரோ - இதைக்
கேட்டுக்கொள் பெட்டகமே - எண்ணிப்
பார்த்துக்கொள் பெட்டகமே. (௪௨)

நெல்லூ ரத்தி மரத்தடியில் ரொம்ப
நேச முடையவ ளென்றீரோ - இதைக்

கேட்டுக்கொள் பெட்டகமே - எண்ணிப்
பார்த்துக்கொள் பெட்டகமே. (சஙு)

ஆனைக் குளத்தங் கரையோரமென்மே
லாசை யுடையவ ளென்றீரோ - இதைக்
கேட்டுக்கொள் பெட்டகமே - எண்ணிப்
பார்த்துக்கொள் பெட்டகமே. (சச)

பொய்யா னேரிக் கரை தனிலே புறம்
போகாள் போகா ளென்றீரோ - இதைக்
கேட்டுக்கொள் பெட்டகமே - எண்ணிப்
பார்த்துக்கொள் பெட்டகமே. (சரு)

கோதையென் மாதைப் பழுதுரைத்தாற் பாவம்
கொள்ளும் நரகெய்து மென்றீரோ - இதைக்
கேட்டுக்கொள் பெட்டகமே - எண்ணிப்
பார்த்துக்கொள் பெட்டகமே. (சசு)

ஏகாலிக் கவள் மேலு மவளுக்
கிசைந்த கழுதையின் மேலுமென்றேன்-இப்போ
பார்த்துக்கொள் பெட்டகமே - உற்றுக்
கேட்டுக்கொள் பெட்டகமே. (சஎ)

தில்லை வனத்தின்குளக் கரையி லப்படிச்
செய்யாள் செய்யா ளென்றீரோ - இதைக்
கேட்டுக்கொள் பெட்டகமே - எண்ணிப்
பார்த்துக்கொள் பெட்டகமே. (சஅ)

வே று

வாரணியும் குஜத்திற் சந்தனக் கையை
வைத்தன னென்னப் பதரிடுமோர்
நாரியை நீதித் தலைவன் மனைவி
நடத்துதல் கண்டிலை பெட்டகமே. (சகூ)

றள்ளிக் கண்மாதை மணம்புணர்ந்தா யென்று
நுண்ணுகிராற் படக் கண்மலனாக்
கிள்ளி யவள்மிசை பற்றற வைத்தனள்
கேட்டிலையோ சொல்வை பெட்டகமே. (ரு0)

கோணிய காலுடை யான்மொழியாற் கொண்ட
கோமகன்றன் றலையைத் துணித்த
வாணுதல் மந்திரி மைந்தன் தடுத்திட
வன்பழி சூடினள் பெட்டகமே. (ருக)

வே று.

சித்திரவேத ராசன் மனைவியை முடவனுதைத்த
செய்கைகண்டு சிரித்த வரசன்வாய்
முத்த முதிரக்கண்டு சென்றவள் பின்னுமுரைத்த
முறைமை முழுது மறிந்த தில்லையோ. (ருஉ)

மன்னரீரற்ற வேளையாபத்தி லுதவிசெய்த
மன்னுதாயன் அன்ன னுகுமே
என்னவெதிரிற் சொல்லி மறைவிலே தோழமை
கொளுமியல் புளாளொரு பெண்ணுமல்லவோ. ()

ஒன்றிரண்டு மூன்று நாலெனநெற் குதிர்தனி
லொடுக்கிப்பின்னு முற்றவர்க் கிருந்து
துன்று மய்யம் அவரவர்க் ககலப்
பயனுரைத்திடும் தோகையும்ஒரு கன்னியல்லவோ.

அப்படியிருக்கடி வண்ணாத்தியின் மகளே யென்று
அறைந்துபோவென் றனுப்பிக் கணவனும்
ஒப்பவேயவன் வீட்டுச் செய்திபோற் கள்ளமறச்சொல்
லுள்ளமுடையாள் பெண்ணு மல்லவோ. (௫௫)

வே று.

பழைய னூரினில் நீலி கதைதனைப்
பார்த்திருப்பா யெனி லிவ்விதமாய்
இளயபுத்தி யடைவாயோ யின்ன
மியம்பக் கேட்டுக்கொள் பெட்டகமே. (௫௬)

விக்கிர மார்க்கன் தமயன் மனைவிமுன்
மேவு நடக்கைதனை யறிந்து
தக்க கொழுனன் வனத்தை யடைந்தது
சற்று மறியாயோ பெட்டகமே. (௫௭)

கொண்டையி லீசன் வைத்தான தறிந்தென்
குயவத்தில் வைத்தன னென்றகதை
கண்டிருந்தா லிவள் சொன்ன மொழியினிற்
கட்டுப் படுவாயோ பெட்டகமே. (௫௮)

ஆரியனைவிட் டரசனைச் சார்ந்து
அவனையுங் கொன்று பலவிதமாய்
மோர்க்குடந் தன்னை யுடைத்துச் சிரித்ததை
முற்று மறியாயோ பெட்டகமே. (ருக)

கங்கையைச் சூடும் பெருமானே கடைக்
கண்கொண்டு பார்த்திந்தக் கத்தரிக்காய்
தின்றிறையோ யில்லையோ யென்ற பெண்கதை
செப்ப வறியாயோ பெட்டகமே. (சு0)

பத்தா வேவிப சாரி யென்றதே
பலிக்கு மெனமுன்னம் சொன்னேனே
உத்தமிக்குன் சொற் பலித்ததென்று ளிவ்
வுலகத்தி லல்லவோ பெட்டகமே. (சுக)

செங்கையில் வாள்கொண்டு யானையைக் குத்தியோர்
செய்தியைக் கொண்டு மறைத்தெனது
தங்கை கனவும் பழுதாமோ வென்ற
தன்மை யறியாயோ பெட்டகமே. (சுஉ)

பட்டப் பகலிற் காக்கையைக் கண்டு
பயந்தவள் பாதி யிரவினிலே

இஷ்ட னிடத்தினி லாற்றைப் பிணத்தின்மே
லேறி நடந்தனள் பெட்டகமே. (சுங)

சம்பு விடக்கை யிழந்திடக் கண்டுமுன்
சாற்றிய மங்கை யிளமதியால்
வம்பனைத் தொட்டு வரசனை விட்ட
மதி யறியாயோ சொல் பெட்டகமே. (சுச)

கோளரி மிஞ்சிய காட்டினிலே முன்
குறங்கினில் வைத்து வளர்த்தெடுத்த
ஆளனைக் கொன்று முடவனைச் சார்ந்த
தறிந்திலையோ சொல்வை பெட்டகமே. (சுரு)

மூக்கிற் கரிதுடை யென்று நிதமும்
மொழிந்தவ ளுத்தமி யென்றதை மன்
காக்கு மரசன் சொல்லால விழுதினிற்
கண்டறிந்தா னல்லோ பெட்டகமே. (சுசு)

மண்ணி லருந்ததி யாயினன் நீயும்
வசிட்ட னெனவே தவம் காட்டில்
நண்ணுவை போவென் றனுப்பிப் புறம்சென்ற
நாரியும் பெண்ணன்றோ பெட்டகமே. (சுஎ)

கூடமடிகிறே னென்று சொன்ன யெந்தன்
கோவணமும் பறிகொள்ளு தற்கோ
வாடியென் கோவணம் தாடியென்றே யெழும்
மன்னன்கதை பொய்யோ பெட்டகமே. (சுஅ)

எத்தனையோ நரகத் தினிலேறுதற்
கிப்படியொத்தவர் தம்மை யெல்லாம்
முற்றுமுரைக்க வயதுளதோ யென்ன
மோகமுற்றாய் சொல்வை பெட்டகமே. (சுகூ)

உத்தமி யாகிய பத்தினி மாத
ருடையகுணமு மவர் புகழும்
இத்தனை நாளா யறிந்திலையோ கொஞ்ச
மியம்பக் கேட்டுக்கொள் பெட்டகமே. (எ0)

அண்டர் புகழும் புரூரவ வேந்தர்க்
கமைந்த மனைவி யயலூரிற்
குன்றுகல்லாக வமைந்த கதைதனைக்
கூறவுங் கேட்டிலை பெட்டகமே. (எக)

அன்னத்தைத் தூது நடத்தி னளன்பெற்ற
வன்புள்ள நற்றமை யந்தி யென்பாள்

துன்னிய வேடன் றனையெறித்தா ளது
சொல்ல வறியாயோ பெட்டகமே. (எஉ)

மன்னவ னான வரிச்சந்திரன் சொன்ன
வாய் மொழியைத்தவ ராவிதமாய்
என்னையும் விற்றுக் கொடுவென்ற பெண்கதை
யின்ன மறியாயோ பெட்டகமே. (எஙா)

முடப் புருஷனைத் தாசி யிடத்திற்கு
முதுகிற் றூக்கி நடப்பவளை
விடியிற் றாலி யறுப்பை யென்முன்விடி
யாமற்செய்தா ளன்றோ பெட்டகமே. (எச)

கொக்கென் றிருந்தையோ கொங்கணவா வென்று
கூறுமொருத்தி புகழனைத்தும்
இக்கலி காலத்தி லுள்ளதுவே யதை
யெண்ணி யறியாயோ பெட்டகமே. (எரு)

செந்தமிழ் நாடன் வரகுணன் மாதைச்
சிறந்த வடமரு தீசருக்குத்
தந்தனனே யவளுஞ் சரியென் றதைச்
சற்று மறியாயோ பெட்டகமே. (எசா)

மண்ணைச் சமைத்துக் கொடுவென்று முன்னம்
வசிட்டனுரைக்க வதைப் பாகம்
பண்ணிக் கொடுத்த அருந்ததி செய்கை
பகர வறியாயோ பெட்டகமே. (எஎ)

சேடனும் வாணியும் வேதனுஞ் சொல்லத்
திறமை யில்லாத புகழி னனைக்
கூடிச் சுகிக்கும் தவமுள மைந்தனை
நாடித் துதிக்கலாம் பெட்டகமே. (எஅ)

ஆயிரமோ வொரு பானை நிறைந்த
அமுதக்கு மொன்று பதமாகும்
மாயமதாகத் திறந்து வெளியில்
வரவும் சமயமே பெட்டகமே. (எகூ)

என்ற எழுபத்தொன்பதோடு அவ்வை நிறுத்தியவுடனே வீரகோபாலன் பெட்டகத்தின் மேல்மூடியைத்திறந்து வெளிப்பட் டதனைக் கண்ட சோரநாயகனுனவன் கதவைத் திறந்து கொண்டு வெளியில் ஓடிவிட்டான். அதுகண்டு பூங்கோதையைப் பார்த்து இதுதான் தலைவலி யோவென்று பிடித்து அங்கிருந்த தூணிற்கட்டி

வைத்து அவ்வையை அடிபணிந்து என்னை இரக்ஷித்தருளிய ஜெகன்மாதாவே! இக்கொடிய பாதகியை என்னசெய்ய உத்தரவு செய்கிறை யோ அப்படிச்செய்யத் துணிந்திருக்கின்றேன் திருவாய் மலர்ந்தருள வேணுமென, அவ்வை கூறியது.

**வெண்பா.**

பத்தாவுக் கேற்ற பதிவிரதை யுண்டானல்
எத்தாலுங் கூடி யிருக்கலாஞ் - சற்றேனும்
வேருகிய மனத்து மின்னெனவே கண்டாக்காற்
கூறுமற் சந்நியாசங் கொள்.

மையாடு கண்ணுடைய மானர்தம் மன்னவர்க்குப்
பொய்யான வுள்ளம் புரிவாரேற் - செய்யாத
தண்டமதா மில்லைமறு தார்குழலைச் சேரதில்லை
அண்டாச்சேர் சந்நியாசி யாய்.

என்றபடி செய்வதில் இவளைச் சிட்சிப்பதை விஞலும் வேறு நற்குணமுடைய மகளீர் இசை வாரேல் இவ் வில்லறத்தில் வாழ்வாய். அதில்லை

யேற் சந்நியாசி யாதல் நலமென்று கூறி விடு ந்தவுடனே அவ்விடத்தை விட்டு அவ்வை நீங்கக்கண்டு வீரகோபாலன் பலவாறும் எண் ணிச் சந்நியாசமே மேலெனத் துணிந்து இல் லறத்தில் நிராசை யடைந்து அவ்வில்லறத்தை நீங்கிப் பின்னும் அவ்வை சென்றவிடத்தைத் தேடிச்சென்று கண்டு அவ்வையைத் துதிசெ ய்து சொல்லியது.

தரு.

பல்லவி.

* வனவேடர்கள் தாழ்மதியாய் நல்விதியாய்.

அநுபல்லவி.

வனமோகமதாற் கதிபோயினனுள் - (வனவேடர்கள்)

சரணங்கள்.

ஜனகா தியர்பாற் றனியாய் வருவோன்
எனையாள் இலனே யிதுவே னருளாய் (வன)

பொய்யா மொழியே புவிநா யகமே
தய்யோ னருளே சுகவா ரிதியே (வன)

---

* "வனவேடர்கள்" என்றது புலாதிகள்.

மடவார் மயலால் மதிபோய்ச் சதியால்
இடர் மேவியபோ தீடேற் றினையே (வன)

பயமாய் மறலிகைப் படும்நாள் தனிலே
அயனே அரியே அரனேயென் றிடலாமோ (வன)

காமா கரனு தியினுற் கதிபோய்
ஏமாந்தவ னுகினனே நீயருள் வாய் (வன)

உடலும் அறிவும் உயிரும் உனதே
கடனே யெனைநீ கரையேற் றுவதே (வன)

என்று துதிசெய்தற்கிரங்கி அவ்வையாற் சந்நி யாசபத வுபதேசம் செயப்பெற்று அனுஷ்டித்து மகிழ்ந்திருந்தான்.

இவ்வாறு பெட்டகம் என்றது உற்பத்தியென்றனர்.

முற்றிற்று.

---